# முஹம்மது நபி (ஸல்)

## பொன்மொழிகள் 100



தொகுப்பு

**வீரை சாகுல் ஹமீது B.A.,**

அன்பளிப்பு

வெளியீடு

**ரஹ்மான் பப்ளிகேஷன்ஸ்**

8/1, ஸ்டிங்கர் தெரு, முதல் மாடி, பிராட்வே.

சென்னை - 600 108. போன் 538 4497, 53[illegible] 2014

அஸ்ஸலாமு அலைக்கும்!

# திருமண (நிக்காஹ்) அன்பளிப்பு

மணமகன் :

## K. தமீம் அன்சாரி

மணமகள் :

## N. பல்கீஸ் பர்சானா

## மணநாள் 2-6-2002

எங்கள் இல்லத் திருமணத்திற்கு
வருகை தந்து மணமக்களுக்காக துவா
செய்ததற்கு எங்களின் மனமார்ந்த
நன்றியை தெரிவிக்கிறோம்.

**O.T.K. சிக்கந்தர் & பிரதர்ஸ்**

OTTIS. சென்னை - 600 001.

# முஹம்மது நபி (ஸல்) பொன்மொழிகள்

# 100

தொகுப்பு:

**வீரை சாகுல் ஹமீது** B.A.,

வெளியீடு

**ரஹ்மான் பப்ளிகேஷன்ஸ்**

8/1, ஸ்டிங்கர் தெரு, முதல் மாடி, பிராட்வே.
சென்னை – 600 108 போன்: 5384497, 5392014

2

# மணமக்களை வாழ்த்தி முஹம்மது நபி (ஸல்) அவர்கள் செய்த துவா

**பாரக்கல் லாஹு லக்குமா வபாரக அலைக்குமா வஜம அ பைனக்குமா பீ கைர்.**

பொருள் : அல்லாஹ் உங்கள் இருவருக்கும் அபிவிருத்தி செய்வானாக; உங்கள் இருவரின் மீதும் பரக்கத் அருள்வானாக. நல்விஷயத்தில் உங்கள் இருவரிடையே ஒற்றுமையை ஏற்படுத்துவானாக. ஆமீன்.

திருமண உரை நிகழ்த்தும் போது அண்ணலார் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் பின்வரும் இறை வசனத்தை ஓதுவார்கள் "மனிதர்களே உங்கள் இறைவனை அஞ்சுங்கள், அவன் உங்கள் யாவரையும் ஒரே ஆத்மாவில் இருந்து படைத்தான். அந்த ஆத்மாவில் இருந்து அதனுடைய துணையைப் படைத்தான். அவ்விருரி லிருந்து அநேக ஆண், பெண்களை (உலகில்) பரவச் செய்தான் எந்த இறைவனின் பெயரைக் கொண்டு நீங்கள் மற்றவரிடமிருந்து தம் உரிமையை கோருகிறீர்களோ அந்த இறைவனை அஞ்சுங்கள். இன்னும் ரத்தபந்தங்களை முறிப்பதிலிருந்து விலகியிருங்கள் நிச்சயமாக அல்லாஹ் உங்களைக் கண்காணித்துக் கொண்டிருக்கின்றான்.

# எண்ணினேன்! எழுதுகிறேன்!

அன்புடையீர்!

அஸ்ஸலாமு அலைக்கும்

நம் வீட்டுத் திருமணங்களுக்காக நாம் செலவிடும் பெரும் தொகையில் ஒரு சிறு பகுதியை மார்க்க விஷயங்களை தெரிந்து கொள்வதற்கும், இஸ்லாத்தின் அடிப்படை விஷயங்களை புரிந்து கொள்வதற்கும் செலவிட வேண்டும் என்பது எனது ஆசை. திருமணம் போன்ற விஷேசங்களில் இதுபோன்ற அளவில் சிறியதும், அளவிடமுடியாத அற்புத அறிவுரைகளை அள்ளித்தந்திடும் அருள் மறையாம் அல் குர்ஆனின் மொழிபெயர்புகளையும் அற்புத மாமனிதர் அல்லாவின் அருள் கொடையாம் அண்ணலார் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் பொன் மொழிகளையும், புத்தகமாக வெளியிட்டு இலவசமாக நமது சமுதாய மக்களுக்கும், நமது இல்ல விசேஷங்களில் கலந்து கொள்ளும் மாற்று மத சகோதரர்களுக்கும் இஸ்லாமிய மார்க்கத்தையும், அதன் அழகிய சமுதாய சீர்திருத்த கொள்கைகளை விளக்கிட உதவி புரிந்து எல்லாம் வல்ல இறைவனின் அருட்கொடையை பெற்று அனைவரும் மார்க்க நெறிப்படி வாழ இருகரம் ஏந்தி துவா செய்கிறேன்.

இஸ்லாமிய மக்களுக்கு மட்டுமல்லாமல், உலக மக்கள் அனைவருக்கும் ஓர் அழகிய முன்மாதிரியாக வாழ்ந்து வழிகாட்டிச் சென்ற இறைதூதர் அண்ணலார் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வழி நடப்போம்!

இஸ்லாம் என்னும் புனித மார்க்கம் இட்ட கட்டளைப்படி தீன் வழியில் இருந்து பிறழச்செய்து நரகத்தின் நெருப்பிற்கு நம்மை இறகாக்கிட முயற்சி செய்யும் சைத்தானின் சூழ்ச்சியை முறியடிப்போம்!

நமது திருமணங்களிலே அண்ணலார் காட்டிய வழிமுறைகளை அரங்கேற்றுவோம்! இன்ஷா அல்லாஹ்!

எல்லாம் வல்ல இறைவன் அப்பேர்பட்ட பெரும் பாக்கியத்தை நம் அனைவருக்கும் தந்து ஈடுஇணையற்ற "ஜன்னத்துல் பிர்தவ்ஸ்" என்னும் மேலான சொர்க்கத்தை தந்தருள பிரார்த்திப்போம்!

வஸ்ஸலாம்!

**வீரை சாகுல் ஹமீது B.A., சென்னை - 108.**

# பொருளடக்கம்



யார் எனது நாற்பது மொழிகளை (உலகில்) போதித்துவிட்டு மரணிப்பாரோ அவர் சொர்க்கப் பூங்காவில் எனது தோழராகி விடுவார்

– நபி மொழி

எல்லாம் வல்ல இறைவன் நம் பாவங்கள் அனைத்தையும் மன்னித்து நபிவழி நடந்து சொர்க்கத்தை அடைபவர்களாக ஆக்கி அருள்வானாக! ஆமீன்!!

அகில இந்திய தேசியலீக்கின் பொது செயலாளரும், தமிழ் மாநில தலைவரும், தமிழக சட்டப் பேரவை உறுப்பினருமான பன்மொழிப் புலவர் முஸ்லிம் சமுதாய மக்களின் உரிமைக் குரல் சம்ஷிரே மில்லத் அல்ஹாஜ் எம்.ஏ.அப்துல் லத்தீப் எம்.ஏ., பி.எல்., எம்.எல்.ஏ அவர்கள் அளித்த

# மதிப்புரை

அன்புடையீர்,

அஸ்ஸலாமு அலைக்கும்!

விருப்பம் என்னும் உள் உணர்வுகளுக்கு ஏற்ப வாழும் இயற் உரிமையை பெற்றிருப்பவன் உயர்திணை படைப்பினங்களில் மனிதனே முன்னிலை பெற்று திகழ்கின்றான். எனவே மனித விருப்பங்களுக்கு மனிதனே பொறுப்பாகும் தன்மையோடு படைக்கப்பட்டிருப்பவன் மனிதன் மட்டும்தான் இறைவிருப்பம் நிலையானது இறைவிருப்பப்படி வாழவேண்டும் என்பது இறைவனுடைய கட்டளை. ஆனால் அந்த கட்டளையை ஏற்று நடப்பதும், மாறுபட்டு நிற்பதும் மனித விருப்பத்தின் பாற்பட்டதாகும். இறை விருப்பத்தையே தன் விருப்பமாக மாற்றி வாழ்பவன் எல்லா நிலைகளிலும் ஏற்றம் பெற்று திகழ்வான் என்பது மனிதனுக்கு அறிவிக்கப்பட்ட ஒன்று. இந்த இறை விருப்பங்களை இறைவனிடமிருந்தே நேரிடையாக அறிவது எல்லோருக்கும் சாத்தியமான ஒன்று அல்ல. தன்னுடைய விருப்பங்களை தெரிவிப்பதற்கென்று ஒருசில மனிதர்களை இறைவன் தேர்ந்தெடுத்து தன்னுடைய விருப்பங்களை அறிவித்துள்ளான். இந்த நோக்கத்திற்காக தேர்ந்தெடுக்கப்படுகிற மனித புனிதர்களை இறைதூதர்கள் என்று இறைவனே கூறுகிறான். இந்த இறைதூதர்கள் தெரிவிக்கின்ற கருத்துக்கள் செய்கின்ற அறிக்கைகள் இரண்டு வகைப்படுகின்றன.

அசாதாரண நிலையில் தன்னிலை மறந்து அகமிய, ஆத்மீக உயர்நிலையில் அவர்கள் மூலமாக வெளியாகும் கருத்துக்கள் இறை கட்டளைகளாக (வஹீ) கணிக்கப்படுகின்றன. சாதாரண நிலையில் மனித உணர்வுகளோடு வெளிப்படுத்துகிற எண்ணங்கள் அவர்தம் வழிகாட்டும் கருத்துக்களாக போற்றப்படுகின்றன. ஆனால், இந்த இரண்டு நிலைகளிலும்அவர்தம் வாயிலிருந்து வெளியாகும் சொற்கள் இறை நாட்டத்தின் பாற்பட்டது என்பது மாற்றமுடியாத மறுக்க முடியாத உண்மையாகும். எனவே அசாதாரண நிலையில் தெரிவிக்கின்ற

கருத்துக்கள் இறைவனின் சொந்த கருத்துகளாகவும் சாதாரண நிலையில் உதிர்க்கப்படுகின்ற சொற்கள் இறை நாட்டத்தோடு இறைதூதர்கள் தெரிவிக்கின்ற அவர்தம் சொந்த கருத்துக்கள் என்றும் ஏற்றுக் கொள்ளப்பட்டு இருக்கின்றன. இந்த இரண்டு நிலைகளிலும் தெரிவிக்கப்படுகிற கருத்துக்களுக்கு இறைதூதர்களுடைய வாயிலிருந்து வெளியாகும் சொற்களுக்குரிய ஓர் பொது அடிப்படை ஆகும். இறைதூதர்களில் இருந்து சாதாரண நிலையில் உள்ள மனிதர்கள் வாழ்க்கைக்குரிய நேர்வழி காட்டுதலை பெறவேண்டும் என்பது இறைவனுடைய நாட்டமாகும். ஆனால், இறைதூதர்கள் இறைவனிடத்தில் இருந்தே நேரிடையாக வழிகாட்டுதலை பெறுகிறார்கள். இதுதான் இறைதூதர்களுக்கும் சாதாரண மனிதர்களுக்கும் இருக்கக்கூடிய அடிப்படை வித்தியாசமாகும்.

இந்த தூதர்களில் இறுதியானவராகவும், நிறைவு என்னும் சொல்லுக்கு முழு இலக்கணமாகவும் அருளப்பட்டவர் முஹம்மது என்னும் சிறப்புப்பெயரை பெற்று இறைவனின் கடைசி ஒலியாக மனித கோடிகளுக்கு அருளப் பெற்றவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அசாதாரண நிலையில் அவர் வாயிலிருந்து உதிர்ந்த சொல்முத்துக்கள் திரட்டப்பட்டு மனிதர்களுக்கு இறைகட்டளையின் திரட்டாக திகழ்ந்து கொண்டிருப்பது அவனுடைய கடைசி வான்மறை அல்குர்ஆன் என போற்றப்படுகிறது. சாதாரண நிலையில் அவர் வாயிலிருந்து உதிர்ந்த சொல்முத்துக்கள் நபி மொழிகள் (அல்ஹதீஸ்) எனும் பெயரில் மனிதர்களின் வாழ்வு நெறியாக போற்றப்பட்டு வருகிறது. அல்குர்ஆன் என்பது இறை எண்ணங்களின் இலக்கணம், அல்ஹதீஸ் என்பது அந்த எண்ணங்களுடைய இலக்கியம். இலக்கியத்தின் ஆதாரம் இலக்கணமாக இருக்க வேண்டும். இந்த இரண்டும் ஒன்றுக்கு மற்றொன்று ஆதாரமாகவும் அடிப்படையாகவும் அமையும் போதுதான் பொருளும் விளங்கும். அருளும்திகழும். எனவே வாழ்க்கை அடிப்படை நெறிகளோடு ஓர் வாழ்வை விரும்புகிற ஓர் மனித சமுதாயம் இலக்கணத்தோடு கூடிய இலக்கியத்தை அறிந்திருக்க வேண்டும். இலக்கணம் இல்லா இலக்கியம் அசைந்து போகும். நன்மை தீமைகளின் பாகுபாடு இல்லாமல் எதற்கும் இசைந்து போகும் மனித வாழ்வின் அசையும், இசையும் இறை நாட்டத்திற்கு மட்டுமே இணங்க வேண்டும்.

இந்த நல்லிணக்க வாழ்வுக்கு வண்டி அசைவதற்கு இரண்டு சக்கரங்கள் தேவைப்படுவது போல் இலக்கண, இலக்கியம் என்ற இரண்டு சக்கரங்களை சமநிலையில் பொருத்தி வண்டியை அசைக்க வேண்டும்.

அப்படி அசைத்தால் நினைத்த இலக்கை அடைய முடியும்.

அருள் மறையில் ஆழ்ந்து துளைக்கும் அருளாளர்கள், அருள்நாதர் நபிகளாரின் பொன்மொழிகளையும் பாங்காக தெரிந்திருக்க வேண்டும். இந்த ஒன்றிணைப்பு நிலை இல்லாமல் எதுவும் கருவாகவும், அருவாகவும், திருவாகவும் உருவகம்பெறமுடியாது. இதற்கு சாதாரண மனிதர்களுக்கும் வழிவகுத்து தரும் வகையில் ஆசிரியர் வீரை சாகுல்ஹமீது அவர்கள் நபிகளாரின் அருள்வாக்குகளை இந்நூலில் திரட்டி தந்துள்ளார். நபிகளை குறித்து அருள்மறையின் பொருள் உள்ள ஓர் விளக்கம் –

**குவல்லஹீ அர்சல ரசூலஹு பில்குதா.....**
**தன்னுடைய தூதரை நேர்வழியோடு அனுப்பிய அந்த**
**ஈடு இணையற்ற அந்த இறைவன்....**

தன்னுடைய இறுதி தூதருக்கு நேர்வழியை தானே விளக்கி அனுப்பியுள்ளான். எனவே இறைவனையே ஆசிரியராகப் பெற்று அவன் நாட்டங்களையே வெளிப்படுத்தக் கூடிய ஓர் சாதனமாக நபிகளை அனுப்பி உள்ளான். எனவே நபிமொழிகள் அனைத்தும் இறைமொழியாகவே கருதப்பட வேண்டும். இறைநாட்டங்களுடைய தெளிவுரை நபிமொழிகள் நபிமொழிகளை தெரிந்து கொள்வது இறை நாட்டங்களை தெரிந்து கொள்வதற்கு ராஜபாட்டை அமைத்து தருவன.

எனவே இதை பாமர மக்களும், அரபிமொழி அறியாதவர்களும் படித்து தெளிவு பெறும் வகையில் இந்த நபிமொழி திரட்டு அமைக்கப்பட்டுள்ளது. இதை படித்து அனைவரும் தெம்பும், தெளிவும் பெற்று இறை நாட்டங்களுக்கு ஏற்ப நபிகளின் வாழ்த்துக்களோடு நல்வாழ்வு பெற இச்சிறிய நூல் உதவ வேண்டும் என பிராத்தித்து இந் நூலின் ஆசிரியர் எனதருமை தம்பி வீரை சாகுல்ஹமீது அவர்களுக்கு இந் நல்முயற்சிக்கான நன்மைகளை அளிக்க வேண்டும் என இறைவனை வேண்டுகிறேன்.

வஸ்ஸலாம்

**எம்.ஏ. அப்துல்லத்தீப்**

சென்னை – 6–6–2001

அல்ஹாஜ் எஸ்.எம். இதாயத்துல்லா மாநிலத்தலைவர் த.மா.கா.
சிறுபான்மைப்பிரிவு அவர்கள் வழங்கிய

# அணிந்துரை

உலகில் தோன்றிய பல மகான்கள் மதநிறுவனர்கள், சிந்தனையாளர்கள் தத்துவஞானிகள், தேசியத் தலைவர்கள் பொன்மொழிகளாக தங்களது கருத்துக்களை மக்களுக்கு இயம்பியுள்ளனர், அவற்றில் தங்களின் பெரும்பாலான கருத்துக்களை தாங்களும் பின்பற்றி வாழ்ந்தனர் என்று குறிப் பிடத்தக்கவர்கள் விரல் விட்டு எண்ணக் கூடிய ஒரு சிலர்தான்.

பெரும்பாலான கருத்துக்கள் என்றில்லாமல் தங்கள் வாக்கையே தனது வாழ்வாகவும் தனது வாழ்வையே தங்களின் வாக்காகவும் மாற்றி மக்கள் சமுதாயத்திற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர்களில் குறிப்பிடத் தக்கவர் நபிகள் நாயகம் (ஸல்) ஒருவர்தான் என்றால் மிகையாகாது. இதனால்தான் மேலை நாட்டு கிருஸ்தவ அறிஞரான மைக்கேல் ஹார்ட்ஸ் என்பார் தனது தி ஹண்ட்ரட்ஸ் என்ற புகழ் வாய்ந்த நூலில் உலகில் மகான்கள் என்ற நூறு பெரியவர்களில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முதன்மையானவராக குறிப்பிடுகின்றார்.

சொல்லுதல் யார்க்கும் எளிய அறியவாம்
சொல்லிய வண்ணம் செயல்

என்பது வள்ளுவரின் குறள் சொல்லியபடி வாழ்ந்து காட்டிய நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பொன் மொழிகள், மற்றும் அவரது வாழ்வு நெறிகள் அவர்கள் தன் கண் முன்னே அனுமதித்தவை ஹதீஸ்கள் என இஸ்லாமிய வரலாற்றில் கூறப்படுகின்றன.

அத்தகைய பல்லாயிரம் பொன் மொழிகளில் நூறு பொன் மொழிகளைத் தொகுத்திருக்கிறார் தம்பி **வீரை சாகுல் ஹமீது** அவர்கள் நான் பிறந்த பார்த்திபனூருக்கு அருகில் சமுதாயப் பற்றுள்ள சிறந்த ஊரான வீரசோழனைச் சார்ந்தவர். நல்ல குடும்பத்தில் பிறந்த அவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் **பொன் மொழிகளை** எல்லோரும் அறிய வேண்டி எளிய தமிழில் சிறு நூலாகத் தொகுத்துள்ளார்.

இது போன்ற சிறந்த தொகுப்புகளை மேலும் ஆதார நூல்களின் பெயர்களுடன் தொகுத்து அனைத்து மத மக்களும் படித்து பயன் பெறும் வகையில் வெளியிட எல்லாம் வல்ல இறைவனைப் பிராத்திக்கிறேன்.

நாள் : 8–6–2001 அன்புடன்

சென்னை. **எஸ்.எம். இதாயத்துல்லா**

1. திருமணத்தைவெளிப்படையாக (பலர் அறிய) செய்யுங்கள். மேலும் அதனைப் பள்ளிவாயில்களில் நடத்துங்கள். மேலும் அதற்காக தஃப்பும் (சிறுபறை) முழங்குங்கள்.

**அறிவிப்பாளர்— ஆயிஷா (ரலி) நூல் – திர்மிதி**

---

2. குறையுள்ள பொருளை ஒருவன் அதைப் பற்றி தெளிவு படுத்தாமல் விற்பனை செய்தால் அவன் அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாகி விட்டான். அல்லது வானவர்கள் அவனை சபிக்கின்றனர்.

**நூல் – இப்னுமாஜா**

---

3. உங்களுக்கு முன்பு (வாழ்ந்த) ஒரு மனிதனின் உயிரைக் கைப்பற்ற வந்த வானவர் அந்த மனிதரிடம், நீர் ஏதாவது செய்திருக்கிறீரா? என்று வினவியபோது அதைப்பற்றி நான் அறிந்ததில்லையே என்று பதில் சொல்ல, யோசித்துப் பாரும் என்று கூறப்பட்டது. ஒரே ஒரு செயல் எனக்கு நினைவுக்கு வருகிறது. (என்னவென்றால்) நான் உலகில் வியாபாரம் செய்து வரும்போது வசதி உள்ளவர்களுக்கு (பணம் வசூலில்) அவகாசம் அளித்தேன்! வசதியற்றவர்களின் கடன்களை வசூலிக்காமல் தள்ளுபடி செய்தேன் என்று கூறினார். இந்த செயலுக்காக அல்லாஹ் அந்த மனிதரை சொர்க்கம் நுழையச் செய்தான்.

**நூல் – புகாரி**

---

4. நீங்கள் பொய் சத்தியம் செய்து ஒரு பொருளை விற்பனை செய்த போதிலும் அது அபிவிருத்தியை கெடுத்து விடுகின்றது.

**நூல் – புகாரி**

5. மனித குலத்திற்கு ஒரு காலம் வரும் அப்பொழுது மனிதன் தான் உட்கொள்வது அனுமதிக்கப்பட்டதா (ஹலாலா) அனுமதிக்கப்படாததா (ஹராமா) என்பதை பற்றி கவலைப்படமாட்டான்.

**அறிவிப்பாளர் - அபூஹுரைரா (ரலி)**

---

6. ஒட்டகம் குடிப்பது போன்று தண்ணீரை குடிக்காதீர்கள். இரண்டு அல்லது மூன்று முறைகள் (மூச்சு விட்டு) குடிப்பதுடன் குடிக்கும்போது பிஸ்மி கூறி குடியுங்கள். குடித்த பின் அல்ஹம்துலில்லாஹ் என்று கூறுங்கள்.

**நூல் - திர்மிதி**

---

7. உங்களில் யாராகிலும் தம் இடது கையால் உண்ணுவதும் (தண்ணீர்) பருகுவதும் கூடாது. ஏனென்றால் இப்லீஸ் (ஷைத்தான்) தனது இடது கையாலேயே குடிக்கிறான் உண்ணுகிறான்.

**நூல் - முஸ்லிம்**

---

8. ஒரு மனிதன் அவனது கையாலேயே செய்யும் வேலையும், ஒவ்வொரு கண்ணியமான நேர்மையான வியாபாரமும்தான் வேலைகளிலேயே சிறந்தது.

**அறிவிப்பாளர் - ராஃபிஉ டின்கதீஜ்** **நூல்- அஹமது**

---

9. ஒரு சமயம் நான் எனது பணியாளை அடித்து விட்டேன். அது சமயம் எனது முதுகு புறமாக (ஒரு குரல்) அபூ மஸ்வூதே! உம்மை விட இறைவன் உமது பணியாளர் மீது மிகவும் சக்தி

படைத்தவன் என்ற சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். அங்கே திருநபி (ஸல்) நின்று கொண்டிருந்தார்கள். இறைதூதே! இந்த நேரமே எனது அடிமையை (பணியாளை) விடுதலை செய்கின்றேன் என்று திருநபி (ஸல்) அவர்களிடம் கூறினேன். அவரை நீர் விடுதலை செய்யாதிருந்தால் திருநபி (ஸல்) அவர்கள் கோபம் கொண்டவர்களாக எச்சரித்தார்கள்.

**அறிவிப்பாவர் – அபூ மஸ்வூத் (ரலி)**

---

10. இறைதூதே! ஒரு பணியாளரை எத்தனை முறை மன்னிக்க வேண்டும் என்று மூன்று தடவை கேட்ட கேள்விக்கு, ஒரு பணியாளரை எழுபது முறை மன்னிக்க வேண்டும் என்று திருநபி (ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள்.

**நூல் – அக்லாக் முஹம்மதி**

---

11. எவர் பெருமையால் தனது ஆடையை பூமியில் படுமாறு இழுத்துக் கொண்டு வருகிறாரோ அவரை அல்லாஹ் இறுதித் தீர்ப்பு நாளில் கண்கொண்டு பார்க்க மாட்டான்

**அறிவிப்பாளர் – இப்னு உமர் (ரலி) நூல் – புகாரி, முஸ்லிம்**

---

12. அல்லாவின் தூதர் (ஸல்) அவர்களுக்கு பிடித்தமான ஆடை சட்டையாகும்.

**அறிவிப்பாளர் – உம்முஸல்மா (ரலி) நூல் – திர்மிதி**

---

13. நமக்கும் காபிர்களுக்கும் இடையில் உள்ள வேற்றுமை தொப்பிகள் மீது தலைப்பாகை அணிவதாகும்.

**நூல் – அபூதாவூது**

14. உங்கள் சகோதரரைப் பற்றி நீங்கள் பேசும் பொழுது அவர் எதை விரும்பமாட்டாரோ அதனை நீங்கள் பேசினால் அதுதான் புறம் அதற்கு ஒருவர் கேட்பார் நான் சொல்வது போன்றே எனது சகோதரரிடம் இருந்தால் ... அண்ணலார் அதற்கு பதில் அளித்தார்கள்

"அவரிடம் நீங்கள் சொல்வது போன்றவைகள் இருந்தால் நீங்கள் புறம் பேசிவிட்டீர்கள் அவரிடம் இல்லாததை நீங்கள் சொன்னால் அவர்மீது நீங்கள் அவதூறு சொல்லி விட்டீர்கள்.

அறிவிப்பாளர்- அபூஹுரைரா (ரலி) நூல் - முஸ்லிம்

---

15. அல்லாவின் தூதர் (ஸல்) அவர்கள் ஒருபோதும் ஆபாசமான வார்த்தைகளை கூறியதுமில்லை கேட்டதுமில்லை.

---

16. மனைவியை திருப்திப் படுத்துவதற்காக பொய் சொல்லலாம். போர்களத்தில் எதிரியை (தந்திரத்தால்) வெல்வதற்காக பொய் சொல்லலாம். முஸ்லிம்கள் இருவர்களின் பிணக்கை நீக்குவதற்காக பொய் சொல்லலாம்.

நூல் - திர்மிதி

---

17. யார், நிலத்தை அளவு மோசடி செய்து அபகரிக்கிறாரோ அவரது கழுத்தைச் சுற்றி (மறுமையில்) அதே மாதிரி ஏழு மடங்கு அளவு நிலம் போடப்படும்

அறிவிப்பாளர் - ஆயிஷா (ரலி) நூல் - புகாரி

18. குத்தகை என்பது நிலத்தை பாதி அல்லது மூன்றில் ஒரு பாகம் அல்லது கால் பாகம் (ஒத்தி) குத்தகைக்கு விடுவதாகும். திருநபி (ஸல்) அவர்கள் இதனை தடை செய்தார்கள்.

நூல் – அபூதாவூது

---

19. எவர் குத்தகை விடுவதை விட்டும் விலகவில்லையோ, அவர் இறைவனுடனும் அவனுடைய தூதருடனும் யுத்தம் செய்ய தயாராக இருக்கட்டும்.

அறிவிப்பவர் – ஜாபிர் (ரலி)

---

20. உங்களில் ஒருவருக்கொருவர் (காலில்) விழுந்து தலைவணங்க (ஸஜ்தா) செய்ய ஏவி இருந்தால் மனைவி கணவனுக்கு தலைவணங்க ஏவி இருப்பேன். அதற்கு இடமில்லை. இறைவனுக்கு மட்டுமே தலைவணங்க வேண்டும்.

அறிவிப்பாளர் – அபூஹுரைரா (ரலி) நூல் – திர்மிதி

---

21. என் உயிர் எவன் வசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக சொல்கிறேன். கணவன் தன் மனைவியை (உடல் உறவு கொள்ள) அழைக்கும் போது மனைவி மறுத்து விடுவாளேயானால் இறைவன் அவள் மீது கோபம் கொள்கிறான். கணவனை அவள் மகிழ்ச்சியடையச் செய்யும் வரை இறைவன் கோபம் நீடித்துக் கொண்டே இருக்கும்.

நூல் – புகாரி

22. எவள் ஒருவள் தன்னுடைய கணவனின் சொத்தில் மோசடியும் திருடவும் செய்கின்றாளோ அவளை எழுபதினாயிரம் வானவர் கள் சபிக்கின்றார்கள்.

அறிவிப்பவர் – அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி)

---

23. அலியே! ஒரு பெண் மீது உமது பார்வை விழுந்த பின் மீண்டும் உமது பார்வை தொடரக்கூடாது! முதல் பார்வை பாவம் ஆகாது, ஆனால் இரண்டாவது பார்வை உமக்கு ஆகுமானதல்ல!

நூல் – திர்மிதி

---

24. எப்போது ஒரு மனிதர் அன்னியப் பெண்ணோடு இருப்பாரோ அங்கு மூன்றாம் நபராக ஷைத்தான் இருக்கின்றான்.

நூல் – மிஷ்காத்

---

25. எவராவது ஒருவர் ஒரு குற்றத்தை அறிந்தும் செய்வாரேயானால் அவர் அதை விட்டும் விடுபடாதவரை அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாகிக் கொண்டிருப்பார்.

நூல் – அபூதாவூது

---

26. ஒரு சமயம் திருநபி (ஸல்) அவர்கள், ஒருவர் நிர்வாணமாக குளிப்பதை பார்த்து விட்டார்கள். நிச்சயமாக இறைவன் வெட்கமுடையவன் உங்களில் எவரும் நிர்வாணமாகக் குளிக்காதீர்கள் (ஆடை அணிந்து கொள்ளுங்கள்) என்று கூறினார்கள்.

நூல் – அபூதாவூது

27. நிர்வாணமாக இருப்பதைவிட்டும் விலகிக் கொள்ளுங்கள். ஏனென்றால் ஒருவர் மலம் ஜலம் கழிக்கும் சமயமும் தன் மனைவியுடன் உடலுறவு கொள்ளும் சமயமும் நீங்கலாக மற்ற சமயங்களில் உங்களை விட்டும் பிரியாத சில வானவர்கள் எப்பொழுதும் உங்களுடன் இருக்கிறார்கள் அவர்களுக்கு நீங்கள் வெட்கப்படுங்கள்.

**நூல் – மிஷ்காத்**

---

28. ஆண்களும் பெண்களும் குளியலறையில் நுழைவதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தடைசெய்தனர். பின்னர் ஆண்கள் கால்சட்டையுடன் அங்குச் செல்ல அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அனுமதி வழங்கினர்.

**அறிவிப்பாளர் – ஆயிஷா (ரலி) ஆதாரம்– அபூதாவூது, திர்மிதி**

---

29. ஒரு முஸ்லிம் தன் மனைவியின் மீது எப்பொழுதும் வெறுப்பைக் காட்ட வேண்டாம் அவளுடைய ஒரு குணம் உங்களுக்கு வருத்தத்தைக் கொடுத்தாலும், அவளுடைய ஒரு குணம் உங்களை மகிழ்ச்சி அடையச் செய்யும்.

**நூல் – முஸ்லிம்**

---

30. ஒரு பெண் தன் கணவனுக்கே தன்னை ஒப்படைத்த பிறகு அவனோடு இல்லறத்தில் இனிமை சுவைத்த பிறகு மனைவியின் ரகசியங்களை வெளியே கூறிக்கொண்டு அலைபவன் மகா கெட்டவன்.

**நூல் – முஸ்லிம்**

31. நீர் உணவுண்டால் மனைவியை உண்ணச் செய்வதும் நீர் உடுத்தினால் அவளையும் உடுத்தச் செய்வதும் ஆகும். (அவள் தவறு செய்தால்) அவளுடைய முகத்தில் அடிக்காதீர், அவளைப் பழிக்காதீர் மனம் வேறுபட்டால் இல்லத்தில் (படுக்கையிலேயே) வேறு படுத்துவதைத் தவிர அவள்மீது வெறுப்படையாதீர்.

நூல் – அபூதாவூது

---

32. திருக்குர்ஆன் கூறுகிறது – வட்டி உண்பவர்கள் ஷைத்தானால் தீண்டப்பட்டு பைத்தியங் கொண்டவன் எழுவது போலல்லாது எழமாட்டார்கள். அவர்களுக்கு இந்நிலை ஏற்பட்டதற்குகாரணம் வியாபாரமும் வட்டியை போன்றதுதான் என்று அவர்கள் கூறியதேயாகும். உண்மையில் அல்லாஹ் வியாபாரத்தை (ஹலால்) ஆகுமானதாகவும் வட்டியை (ஹராம்) தடுக்கப்பட்டதாகவும் ஆக்கியுள்ளான். ஆகவே எவர் தம் இறைவனிடமிருந்து இந்த அறிவுரை வந்தபிறகு இனி வட்டி வாங்குவதை விட்டு விலகி விடுகிறாரோ அவர் முன்னர் வாங்கியது வாங்கியதுதான். என்றாலும் அவருடைய விவகாரம் அல்லாவின் பொறுப்பில் உள்ளது. ஆனால் இந்த கட்டளை வந்தபிறகும் யாரேனும் இந்தக் குற்றத்தை மீண்டும் செய்தால் அவர்கள் நரகவாசிகளேயாவர். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். அல்லாஹ் வட்டியை அழித்து விடுகிறான். இன்னும் தான தர்மங்களை வளரச் செய்கிறான்.

பாகம் 3 – 274–277

---

33. வட்டி (வரவு) எவ்வளவுதான் வருமானத்தை பெருக்கினாலும் அதன் முடிவு குறைந்து போகக்கூடியதே!

நூல் – இப்னுமாஜா

34. இறைநம்பிக்கை கொண்டோரே! நீங்கள் உண்மையில் நம்பிக்கையாளராக இருப்பின் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உங்களுக்கு வரவேண்டிய வட்டிப் பாக்கிகளை விட்டு விடுங்கள். ஆனால் அவ்வாறு நீங்கள் செய்யாவிடின் அல்லாஹ்விடம் இருந்தும் அவனுடைய தூதரிடமிருந்தும் உங்களுக்கு எதிராக போர் அறிவிக்கப்பட்டுவிட்டதென்பதை அறிந்து கொள்ளுங்கள். இப்பொழுதுகூட பாவமன்னிப்பு கோரி நீங்கள் வட்டியை விட்டுவிட்டால் உங்களுடைய மூலதனம் உங்களுக்கே உரியது.

குர்ஆன்–3 = 278–281

---

35. செல்வந்தனாக வேண்டும் என்று பேராசைக் கொள்ளாதீர்கள். அது உங்களை நேர்மையை விட்டும் தூரமாக்கி விடும்.

---

36. மனிதனுக்கு பணத்தின் மீது பேராசை நிறைந்திருக்கின்றது (அவன் விரும்பியபடி) இரு ஒட்டகைகள் நிறைய பொருள் கிடைத்தாலும் (அத்துடன் திருப்தியடையாது) மூன்றாவது ஆசை அனைத்தும் பெற முயலுகின்றான். ஆகையால் மனிதன் வயிற்றை (மண்ணறையின்) மண் அல்லாமல் வேறு எதனாலும் நிரப்ப முடியாது. நூல் – புகாரி

---

37. பேராசையை விட்டும் உங்களை பாதுகாத்துக் கொள்ளுங்கள்! ஏனென்றால் அது உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களை அழித்து அவர்களின் பேராசை கஞ்சத்தனத்தை கற்றுக் கொடுத்தது. அவர்கள் கருமித்தனம் படைத்தவர்களானார்கள். அது அவர்களுக்கு இரக்கமில்லாத தன்மையை கற்றுக் கொடுத்தது. அவர்களை கொடியவர்களாக்கும் பாவங்களைச் செய்யவும் அது கற்பித்து, அவர்களை வழிகேட்டில் ஆக்கிவிட்டது.

நூல் – அபூதாவூது

38. ஒருவர் தன் மனைவியை மூன்று தலாக் கூறிவிட்டார். பின்னர் வேறு ஒருவரை மணமுடித்துக் கொண்டு அவளோடு உடலுறவு கொள்ளுவதற்கு முன் அவரும் அவளை தலாக் கூறிவிட்டார். இது பற்றி நபி (ஸல்) அவர்கள் முந்தியவர் அனுபவித்ததுபோல் அவளிடம் பிந்தியவர் இன்பம் அனுபவிக்காதவரை முந்தியவர் அவளை மீண்டும் திருமணம் செய்ய கூடாது என கூறிவிட்டார்கள்.

---

39. ஆகுமாக்கப்பட்டவைகளில் இறைவனுக்கு கோபம் தரக் கூடியது தலாக் (மண விடுதலை) ஆகும்

அறிவிப்பாளர் – அபூஹுரைரா நூல் – இப்னு மாஜா

---

40. பைத்தியக்காரன் தலாக்கும், போதையினால் அறிவு மாறியிருப்பவன் தலாக்கும் தவிர ஏனைய எல்லாத் தலாக்குகளும் செல்லுபடியானவையாகும். நூல் – திர்மிதி

---

41. பெண் குழந்தை நம் ஆடைமீது சிறுநீர் கழித்துவிட்டால் ஆடையை துவைக்க வேண்டும். ஆண் குழந்தை சிறுநீர் கழித்துவிட்டால் அந்த இடத்தில் தண்ணீர் தெளித்தால் போதும்.

நூல் – புகாரி, முஸ்லிம்

---

42. நான் நின்று கொண்டு சிறுநீர் கழிப்பதைக் கண்ட திருநபி (ஸல்) அவர்கள் உமரே! நீர் நின்று கொண்டு சிறுநீர் கழிக்காதீர் என்று கூறினார்கள். நான் அன்று முதல் எப்போதுமே நின்று கொண்டு சிறுநீர் கழித்ததில்லை.

அறிவிப்பவர் – உமர் (ரலி) நூல் – திர்மிதி

43. நீர் காயாத அசுத்தத்தின் மீது நடந்தாலோ அல்லது உம்முடைய ஆடை அதன்மீது இழுபட்டாலோ கழுவிவிடும். ஆனால் அது (அசுத்தப்பொருள்) காய்ந்ததாக இருப்பின் உம்மீது யாதொரு குற்றமுமில்லை.

**அறிவிப்பாளர் – இப்னு அப்பாஸ் (ரலி)** **நூல் – ரஜீன்**

---

44. எங்களில் எவருடைய உடையிலாவது மாதவிடாயின் இரத்தம் பட்டுவிட்டால் என்ன செய்ய வேண்டும் என ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார் அதற்கு நபி (ஸல்) அவர்கள் அதனைத் துடைத்து விட்டுத் தண்ணீர் ஊற்றி பின்னர் அதனைக் கசக்கிக் உடுத்தி தொழவும் என்று கூறினார்கள்.

**அறிவிப்பாளர் – அஸ்மாபின்து அபூபக்கர் (ரலி)**
**நூல் – புகாரி, முஸ்லிம்**

---

45. இந்திரியம் சளியைப் போன்றது, எனவே நீர் அதனை வைக்கோலைக் கொண்டாயினும் சரியே உம்மை விட்டும் அப்புறப்படுத்தி துடைத்துவிடும்.

**அறிவிப்பாளர் – இப்னுஅப்பாஸ் (ரலி)** **நூல் – திர்மிதி**

---

46. எங்களில் எவரிடமும் ஒரு ஆடைக்கு மேல் இருப்பதில்லை அதில் மாதவிடாய் ஏற்பட்டு இரத்தம் பட்டு விட்டால் அதில் எச்சிலை உமிழ்ந்து நகத்தால் சுரண்டி அதை அப்புறப் படுத்திவிட்டு அந்த இடத்தை தண்ணீரால் கழுவிவிடுவேன்.

**அறிவிப்பாளர் – ஆயிஷா (ரலி)** **நூல் – அபூதாவூது**

47. உங்களில் எவருடைய பாத்திரத்திலேனும் நாய் வாய் வைத்து விடுமானால் அதனை ஏழு முறை கழுவுங்கள். முதல்முறை மண்ணால் தேய்த்து கழுவுங்கள்.

+அறிவிப்பாளர் - அபூஹுரைரா நூல் - புகாரி, முஸ்லிம்

---

48. திரவ வடிவ உணவை (ஹரீரா) ஆயிஷா (ரலி) அவர்கள் தொழுது கொண்டிருக்கும் பொழுது ஓர் பெண் அடிமை அருகே வைத்துவிட்டு சென்றுவிட்டார். பூனை அதனை தின்னத் தொடங்கியது. தொழுது முடித்தவுடன் பூனை அதனை தின்ற இடத்தில் இருந்து எடுத்து தின்றனர். பின்னர் நிச்சயமாக பூனை அசுத்தமானதல்ல. மெய்யாகவே அது உங்கள் வீடுகளில் சுற்றித் திரியும் பிராணியாகும் என்று அண்ணல் நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் - தாவூத்னுஸாலிஜ் ஆதாரம் - அபூதாவூது

---

49. எலி நெய்யில் விழுந்துவிட்டால் என்ன செய்வது என அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் கேட்ட பொழுது அது விழுந்த இடத்தில் உள்ளதையும் அதனை சூழ உள்ளதையும் எடுத்தெறிந்துவிட்டு மீதமுள்ள நெய்யை உண்ணுங்கள் என்று கூறினார்கள்.

---

50. பொந்துகளில் சிறுநீர் கழிப்பதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தடை செய்தனர்.

அறிவிப்பாளர் - அப்துல்லாஹ் இப்னு ஸர்ஜஸ் (ரலி)
நூல் - அபூதாவூது

51. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் படுக்கும் நாற்காலியின் அடியில் ஒரு மரப்பாத்திரம் இருந்துவந்தது. இரவில் அதில் அவர்கள் சிறுநீர் பெய்வர்.

அறிவிப்பாளர் - உமைதுபின் ரகீகா (ரலி)
நூல்- அபூதாவூது, நஸயீ

---

52. உங்களில் எவரும் தாம் குளிக்கும் இடத்தில் (ஹமாமில்) சிறுநீர் பெய்யாதீர்கள். ஏனெனில் அதிலிருந்து ஏதும் உடலில் தெறித்து விடுமோ என்ற சந்தேகம் எழுகிறது என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

---

53. வெள்ளிக்கிழமையன்று உங்களில் எவரும் வீட்டில் அமர்ந்திருந்து விட்டு இமாம் மிம்பர் மீது ஏறி நின்று குத்பா பேருரை நிகழ்த்தும் போது மக்களின் பிடரியை பதற்றத்துடன் தாண்டி தொழச் செல்வதை விட பின்னாலிருந்து சுடுகின்ற தரைமீது தொழுவது அவருக்கு மேலானதாக இருக்கும்.

அறிவிப்பாளர் - அபூஹுரைரா நூல் - முஅத்தா

---

54. எவர் வெள்ளிக்கிழமையன்று மக்கள் பிடரியை பதற்றத்துடன் தாண்டிச்செல்கிறாரோ அவரை நரகத்தின் பாலமாக்கப் பட்டுவிடும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார் கள்.

அறிவிப்பாளர் - முஆதுப்னு அனஸ் (ரலி) நூல் - திர்மிதி

55. பருவம் அடைந்த ஆண்கள் அனைவர்மீதும் ஜும்ஆத் தொழுகை கடமையாகும். அன்றி ஜும்ஆத் தொழுகைக்கு செல்லும் அனைவர் மீதும் குளியல் கடமையாகும்.

**அறிவிப்பாளர் – ஹப்ஸா (ரலி) நூல்– அபூதாவூது, நஸயி**

---

56. இன உறுப்புகள் இரண்டும் கத்னா வரம்புவரை உள்ளே சென்றுவிடின் குளியல் அவசியமாகிவிடுகிறது. நாங்களும் இவ்வித நிலைக்கு ஆளாகிவிட்டால் குளித்து விடுவோம் என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பாளர் – ஆயிஷா (ரலி) நூல் – முஅத்தா**

---

57. உடலுறவுக்குப் பின் குளிப்பது கடமையான குளிப்பாகும் என்று அண்ணல் நபி (ஸல்) கூறியுள்ளார்கள். கடமையான குளிப்பை பற்றி உமர் (ரலி) அவர்கள் அண்ணலாரிடம் கேட்டபொழுது முதலில் இருமுறையோ அல்லது மூன்று முறையோ தம் வலதுகையில் தண்ணீர் எடுத்து தங்களின் இன உறுப்பில் ஊற்றி தங்களின் இடது கையைக் கொண்டு அதையும் அதில் உள்ளவற்றையும் துப்புரவாக கழுவி, பின்னர் இரண்டு கைகளை யும் மூன்றுமுறை கழுவவும், மூன்றுமுறை வாய்கொப்பளித்து, மூன்றுமுறை நாசிக்கு தண்ணீர் செலுத்தி, மூன்று முழங்கை வரை கழுவி தலைக்கு மஸஹ் செய்யாமல் தண்ணீர் ஊற்றவும் என்றார்கள்

**அறிவிப்பாளர் இப்னுஉமர் (ரலி) நூல் – நஸயி**

---

58. உங்களில் எவரேனும் குளிக்க நாடினால் திரைமறைவில் கீழாடை அணிந்தவண்ணம் குளிக்கவும் நிர்வாணமாக குளிப்பதை நபி (ஸல்) தடைசெய்தார்கள்

**அறிவிப்பாளர் – யஃலா (ரலி) நூல் – அபுதாவூ, நஸயி**

59. எனக்கு காற்று பாரிச வாய்வு (பீடிப்பு) ஏற்பட்டிருந்தது, எனவே நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் தொழுகையைப் பற்றி வினவியபோது அதற்கு அவர்கள், நின்று தொழுவீர். முடியாவிடில் உட்கார்ந்து தொழுவீர். (இதுவும்) முடியாவிடில் ஒருக்கணித்துப் படுத்துத் தொழுவீர் என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் – இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி)
நூல்கள் – புகாரி, அபூதாவூது, திர்மிதி, நஸயி

---

60. உங்களில் எவரும் இமாமாக நின்று தொழுக வைத்தால் அவர் சுருக்கமாக தொழுக வைக்கவும். ஏனென்றால் அவர்களில் நிச்சயமாக பலவீனர்கள், நோயாளிகள், சங்கடமுள்ளவர்கள், (அவசரத்) தேவையுள்ளவர்கள் இருக்கின்றனர். ஆனால் அவர் தனியாகத் தொழுதால் நேரப்பட தொழுகவும்.

நூல் – முஸ்லிம்

---

61. சிறுவர்களை தொழுமாறு கட்டளையிடுங்கள் அவர்கள் ஏழு வயதை எட்டிவிட்டால். ஆனால் அவர்கள் பத்து வயதை எய்தியும் தொழுதுவராவிடின் அதற்காக அவர்களை அடித்து தொழச் செய்யுங்கள் என அண்ணல் நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் – ஷிமஅஃரதுப்னு மஃபத்
நூல் – அபூதாவூத், திர்மிதி

---

62. யார் தனது பாவங்கள் மன்னிக்கப்பட வேண்டும் என்ற உறுதியோடு எனது மொழிகளை எழுதிக் கொள்வாரோ அவருடைய பாவங்களை அல்லாஹ் மன்னித்து விடுகிறான்.

அறிவிப்பாளர் – கன்ஜுல் உம்மால்

63. (யார் எனது நாற்பது மொழியை மனப்பாடம் செய்வாரோ) அவரிடம் சொர்க்க வாசல்களில் எந்த வாசல்களில் வேண்டுமானாலும் நுழைவாயாக! என்று கூறப்படும்.

அறிவிப்பாளர் – அபூமஸ்வூத்

---

64. எனது சிறிய வார்த்தையில் பல பெரிய கருத்துக்கள் அடங்கி இருக்கும். இது மற்ற நபிமார்களுக்கு கிடையாது.

நூல் – மிஷ்காத்

---

65. பெருமை என்பது உண்மையை மறுப்பதும் (மற்ற) மனிதர்களை இழிவாக எண்ணித் தன்னில் தானே செருக்கடைவதுமாகும் என்றும் எவனுடைய உள்ளத்தில் அணுஅளவு பெருமை குடிகொண்டுள்ளதோ அவன் சுவனபதி செல்லமாட்டான் என்றும் அண்ணல் (நபி) கூறியுள்ளார்கள்.

அறிவிப்பாளர் – அபூஹுரைரா நூல் – அபூதாவூது

---

66. பெருமை அடிப்போர் மறுமை நாளில் சிற்றெறும்புகள் போன்று ஒன்று சேர்க்கப்படுவர். அவர்களை எல்லா இடங்களில் இருந்தும் இழிவு சூழ்ந்து கொள்வதுடன் அவர்கள் பூலஸ் என்று கூறுப்படும் நரகத்தின் சிறைச்சாலைக்கு கொண்டு செல்லப்படுவர் நெருப்பின் சுவாலை அவர்களுக்கு மேலாக (நாக்கு நீட்டி) நிற்கும். நரகவாசிகளின் உறைந்த இரத்தம், சீல் இவைகள் கலந்த தினதுல் ஜனால் என்னும் சாறு இவர்களுக்கு ஊட்டப்படும்.

அறிவிப்பாளர் – அம்ருப்னுஷுஐபு (தன் தந்தை மூலமாக அறிந்தது)
நூல்– திர்மிதீ

67. பெருமைகள் அனைத்தும் என் போர்வையாகும். கண்ணியம் என் கால் சட்டையாகும். எனவே எவன் என்னிடத்தில் இருந்து இவ்விரண்டில் எதனையும் அபகரிக்கின்றானோ அவனை நான் வேதனை செய்வேன் என அல்லாஹ் கூறியதாக அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

---

68. எவரேனும் ஓர் முடிச்சு போட்டு அதில் ஓதி (ஊதி)னால் அவர் நிச்சயம் சூனியம் செய்தவராவார். எவர் சூனியம் செய்கிறாரோ அவர் நிச்சயமாக அல்லாவுக்கு இணை வைத்தவர் ஆவார்.

**அறிவிப்பாளர் – அபூஹுரைரா நூல் – நஸாயீ**

---

69. எவர் எதிர் காலத்தைப் பற்றி ஜோசியம் கூறுபவனிடம் சென்று அவனிடம் எதையும் பற்றி வினவி அவனின் கூற்றை உண்மையென நம்புவாராயின் அவருடைய நாற்பது நாள் தொழுகை ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது.

**அறிவிப்பாளர் – ஸப்யானிப்னு அபீஉபைத் நூல் – முஸ்லிம்**

---

70. அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு சூனியம் வைக்கப்பட்டது நோயுற்றார்கள். அவர்கள் இறைவனிடம் தங்களின் உடல்நலத்திற்காக இறைஞ்சினார். லபீதுப்னுல் அஃஸம் என்னும் யூதனால் சூனியம் செய்யப்பட்டு சர்வானுடைய கிணற்றில் வைக்கப்பட்டிருந்தது. அதனை ரசூல் (ஸல்) தோழர்களுடன் சென்று கண்டார். அதன் விளக்கத்தை ஆயிஷா (ரலி) அவர்களிடம் வந்து சொன்னார்கள். அப்படியானால் அதை எடுத்துவிட்டீர்களா என கேட்டதற்கு இல்லை அல்லாஹ்தான் எனக்கு உடல்நலன் நல்கிவிட்டானே, எனினும், நான் அதன் காரணமாக மக்களிடையே குழப்பத்தை உண்டு பண்ண விரும்பவில்லை என்று கூறிவிட்டனர். பின்னர் அதனை புதைத்து விடுமாறு பணித்தனர்.

71. மிருகங்களை சண்டைபோடத் தூண்டிவிடுவதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தடைசெய்தனர்.

**அறிவிப்பாளர் – இப்னு அப்பாஸ் (ரலி) நூல் – அபூதாவூது, திர்மிதி**

---

72. எவர் சொக்கட்டான் விளையாடுகிறாரோ அவர் தம் கையைப் பன்றி இரத்தத்தில் தோய்த்தவர் போலாவார் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

**அறிவிப்பாளர் – புரைதா (ரலி) நூல் – அபூதாவூது**

---

73. நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் பொம்மைகளை வைத்து விளையாடி வந்தேன்.

**அறிவிப்பாளர் – ஆயிஷா (ரலி) நூல் – புகாரீ, முஸ்லிம்**

---

74. சகுனம் பார்ப்பது இணை வைப்பதாகும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மூன்று முறை கூறி மேலும் நம்மில் எவரையும் நம்பிக்கையை கொண்டே ஒழிய இறைவன் வாழச் செய்வதில்லை என்று கூறினர்.

**அறிவிப்பாளர் – அப்துல்லாஹ் (ரலி) நூல் – அபுதாவூது**

---

75. நோய்களில் தொற்று நோய் கிடையாது. அபசகுணமும் கிடையாது. ஆனால் நற்சொல் (ஃபால்) என்னை மிகவும் மகிழ்ச்சியில் ஆழ்த்தி விடுகிறது என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**அறிவிப்பாளர் – அனஸ் (ரலி) நூல்– புகாரி, முஸ்லிம்**

76. அபசகுணம் என்பது குதிரைகளிலும் வீடுகளிலும் பெண்களில்தாம் இருக்கின்றன. ஆனால் அபசகுணம் என்பதே இடமில்லை!

**நூல் – புகாரி, முஸ்லிம்**

---

77. கண் திருஷ்டிக்கு ஓதிப் பார்க்க அல்லது ஓதிப்பார்த்துக் கொள்ள திருநபி (ஸல்) அவர்கள் எனக்கு கட்டளையிட்டார்கள்.

**அறிவிப்பாளர் –அன்னை ஆயிஷா (ரலி)** **நூல் – புகாரி**

---

78. கண்திருஷ்டி பொல்லாதது. அது மரணத்தில் கொண்டு விட்டுவிடும். விஷமுள்ள அனைத்திற்கும் (விஷகடிகளுக்கு) ஓதிப்பார்ப்பதற்கு திருநபி (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.

**நூல் – புகாரி**

---

79. அன்னை உம்மு சல்மா (ரலி) அவர்களின் வீட்டில் இருந்த ஒரு பெண்ணின் முகத்தில் மக்கு விழுந்திருந்தது. அந்தப் பெண்ணைப் பார்த்த திருநபி (ஸல்), அவளுக்கு ஓதிப் பாருங்கள். அவளுக்கு கண்திருஷ்டி ஏற்பட்டிருக்கிறது என்று கூறினார்கள்.

**அறிவிப்பாளர் – உம்மு சல்மா (ரலி)**

---

80. உன் நண்பனிடம் அளவோடு நட்புக்கொள்ளும். ஏனெனில் அவன் ஒரு நாள் உமக்கு பகைவனாக மாறி விடக்கூடும். அன்றி உன் பகைவனோடும் அளவோடு பகைமை பாராட்டும். ஏனெனில் அவன் ஒரு நாள் உமக்கு நண்பனாகவும் மாறிவிடக்கூடும் என அண்ணல் நபி (ஸல்) கூறினார்கள்.

**அறிவிப்பாளர் – அபூஹுரைரா** **நூல் – திர்மிதி**

81. அல்லாவிற்காக நட்பு கொள்வதும் அல்லாவுக்காக சினமுறுவதும் (நம்பிக்கையாளரின்) மேலான செயல்களாகும் என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்.

அறிவிப்பாளர் – அபூதர் (ரலி) நூல் – அபூதாவூது

---

82. எவர் தம் (முஸ்லிம் சகோதரரிடம்) ஒரு வருடம் பேசாமல் இருக்கின்றாரோ அவர் அந்த சகோதரரை கொலை செய்ததற்கு ஒப்பாகும். நூல் – அபூதாவூது

---

83. ஒரு சமயம் திருநபி (ஸல்) அவர்கள் யா அல்லாஹ் எங்களை மூதேவிகளாக்கிவிடாதே என்று கேட்கும் படி கூறினார்கள். மூதேவி யார் என்றால் தொழுகையை விட்டவன் என்று அண்ணல் நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் – இப்னு அப்பாஸ் (ரலி)

---

84. அபூஹுரைராவே! மூதேவிகளுக்கு ஐந்து அடையாளங்கள் உள்ளன.

1. ஆலிம் உலமாக்களின் நெருக்கத்தை விட்டும் விலகி இருப்பான்.
2. மார்க்க விரோதமான செயல்களில் தன்னுடைய முழு பலத்தையும் செலவு செய்வான்.
3. தொழுகை ஒரு சடங்காக அவன் செயல்வடிவில் இருக்கும்.
4. அவன் பேசும் வார்த்தைகளில் பொய் நிறைந்திருக்கும்.
5. அவனுடைய உள்ளத்தில் (பொருள் சேகரிக்கும்) உலகாசையே மலிந்திருக்கும். நூல் – அல்ஹதீஸ்

85. கெட்ட மூதேவியின் உள்ளத்தை விட்டும் கருணை அகற்றப்பட்டுவிடும். நூல் – திர்மிதி, அபூதாவூது

86. எவர் வாய்மூடி இருக்கிறாரோ அவர் சித்தி பெற்றவராவார் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர் – இப்னுஉமர் (ரலி) நூல் – திர்மிதி

87. மனிதன் தனக்கு தேவையில்லாத உரையாடல்களை விட்டொழிப்பது இஸ்லாத்தின் நற்குணங்களின் பாற் பட்டதாகும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர் –அலிய்யுப்னு ஹுஸைன் (அபூஹுரைரா மூலமாக)
நூல் – திர்மிதி

88. நாயகமே! தாங்கள் எதன் மீது அதிகமாக அச்சமுறுகிறீர்கள் என்று கேட்டேன். அதற்கு அவர்கள் தங்களின் நாவைப் பிடித்து (சாடைசெய்து) இது பற்றி கவனமாக இரும் என்று கூறினார்.

அறிவிப்பாளர் – ஸுஃப்யான் இப்னு அப்துல்லாஹ் (ரலி)
நூல் – திர்மிதி

89. எவர் என்னுடைய பள்ளிவாசலில் (மஸ்ஜிதே நபவியில்) நாற்பது நேரத் தொழுகைகளை ஒரு நேரமும் களா இல்லாமல் தொழுது வருகின்றாரோ அவருக்கு நயவஞ்சகம், நரக வேதனையை விட்டும் பாதுகாக்கப்படுகின்றது.

நூல் – இப்னு மாஜா

90. ஒரு காலம் வரும் அக்கால மக்கள் பள்ளிவாசல்களில் பேசும் பேச்சுக்கள் இந்த உலகத்தைப் பற்றியதாக இருக்கும். அவர்களுடன் நீங்கள் உட்காராதீர்கள் ஏனென்றால் அவர்களுடைய வணக்க வழிபாடுகளை அல்லாஹ் ஏற்றுக் கொள்ளுவதில்லை.

**அறிவிப்பாளர் – ஹஸன் (ரலி)** **நூல் – பைஹகீ**

---

91. ஒருவர் பள்ளிவாசல் வந்து (வீண் பேச்சு) அதிகமாக பேசுபவராகில் இறை நேசரே! பேசாதீர் என்று வானவர்கள் கூறுகின்றனர். இன்னும் அவர் அதிகமாக பேசினால் அல்லாஹ்வின் சாபம் உன் மீது உண்டாவதாக என்று வானவர்கள் கூறுகின்றனர். இன்னும் அவர் சப்தமிட்டு பேசினால் அல்லாஹ்வின் சாபம் உன் மீது உண்டாவதாக! மௌனமாக இரு! என்று வானவர்கள் கூறுவார்கள்.

**நூல் – இஆனத்தாலிபீன்**

---

92. அன்னியப் பெண்ணுடன் ஆண் எவரும் தனித்து இருக்க வேண்டாம். ஆனால் அவளோடு கோஷா (அவருக்கு மறைவாக இருக்கவேண்டிய) முறை அற்றவர் இருந்தாலொழிய என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்.

**அறிவிப்பாளர் – இப்னு அப்பாஸ் (ரலி)** **நூல் – புகாரி, முஸ்லிம்**

---

93. அலியே எதிர்பாராமல் ஒரு பெண்ணின் மீது பார்வை சென்றுவிடின் மீண்டும் அவளை பார்க்க வேண்டாம். ஏனெனில் எதிர்பாரா வண்ணம் பார்வை சென்று விடுவதால் குற்றமில்லை.

ஆனால் மறுமுறை பார்ப்பது தான் கூடாது என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம் கூறினார்கள்.

**அறிவிப்பாளர் – புரைதா (ரலி) ஆதாரம் அபூதாவூது, திர்மிதி**

---

94. பெண்களுக்கிடையில் ஆண்கள் நடந்து செல்வதை அண்ணல் நபி (ஸல்)அவர்கள் தடை செய்தனர்.

**அறிவிப்பாளர் – இப்னுஉமர் (ரலி) நூல் – அபூதாவூது**

---

95. நீங்கள் ஒருவர் மற்றொருவரை பாவி என்றோ நிராகரிப்பவர் என்றோ திட்ட வேண்டாம். ஒருவேளை அவர் அவ்விதம் இல்லாதிருப்பின் இவர்மீது (அது) திருப்பப்பட்டுவிடும். அதாவது கூறியவரே அவ்விதம் ஆகிவிடுவார் என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்.

**அறிவிப்பாளர் – அபூஸஈத் (ரலி) நூல் – புகாரி**

---

96. இறந்துவிட்டவர்களை ஏசாதீர்கள். ஏனெனில் நிச்சயமாக அவர்கள் தங்களின் வினைக்குரியதை (பலனை) அடைந்துவிட்டனர் என்று அண்ணல் நபி (ஸல்) கூறினார்கள்.

**அறிவிப்பாளர் – ஆயிஷா (ரலி) நூல்–புகாரி, அபூதாவூது**

---

97. ஒருவரை ஒருவர் நிந்தனை செய்தால் அவர் வீண் பழி சுமத்தினால் விளைகின்ற பாவம் யார் அந்தச் செயலை முதலாவதாக தொடங்கினாரோ அவரையே சாரும்.

**நூல் – முஸ்லிம்**

98. என் சிறப்புக்கள் 6

1. பொருள் நிறைந்த பொன்மொழிகள் வழங்கப்பட்டிருக்கின்றேன்.
2. என்னைக் கண்டால் எதிரிகள் பயப்படுவார்கள்.
3. யுத்தத்தில் கிடைத்த பொருட்கள் எனக்கு அனுமதிக்கப்பட்டன.
4. நிலமெல்லாம் தொழுகை இடமாகவும், தூய்மைப்படுத்தும் பொருளாகவும் எனக்கு ஆக்கப்பட்டிருக்கின்றது.
5. மனிதகுலம் அனைவருக்கும் நான் அல்லாஹ்வின் தூதராகஅனுப்பப் பட்டுள்ளேன்.
6. நபிமார்களின் வருகை என்னால் நிறைவு படுத்தப்படுகிறது.

நூல் – முஸ்லிம்

99. எனக்கு 5 சிறப்புப் பெயர்கள் உண்டு

1. முஹம்மது – புகழப்பட்டவர்
2. அஹ்மத் – இறைவனை மிகவும் புகழ்பவர்
3. அல் மா – இறைவனை மிகவும் புகழ்பவர்
4. அல்ஹாஷிர் – மறுமையில் எல்லோரும் எனக்குப்பின் எழுப்பப்படுவார்கள்
5. அல் ஆக்கிப் – இறுதி நபி
6. ரவூப் – ரஹீம். என்றும் அல்லாஹ் எனக்குப் பெயர் வைத்தான்!

நூல் – புகாரி, முஸ்லிம்

100. என்னை உங்கள் உயிருக்கு மேலாக, உங்கள் பெற்றோருக்கு மேலாக, உங்கள் பிள்ளைகளுக்கு மேலாக, உலகப் பொருள் அனைத்திற்கும் மேலாக என்னை நேசிப்பவரே உண்மை முஃமினாக முடியும்.

நூல்கள் – முஸ்லிம், அபூதாவூது, பைஹகீ

அச்சிட்டோர் : ஆசியா கிராபிக்ஸ், சென்னை - 1
☎ 5271365 & 5224240